# அன்பு வாழ்க



ரா. சீனிவாசன், M.A.
தமிழ்த்துணைப் பேராசிரியர்
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை - 10



# அன்பு வாழ்க

ரா. சீனிவாசன், M.A.
தமிழ்த்துணைப் பேராசிரியர்
பச்சையப்பன் கல்லூரி
சென்னை—10



PRINTED AT
THE B. N. K. PRESS
MADRAS—1

 [விலை அணு 0-2-6

# முகவுரை

வயதுவந்தவர் கல்விக்காக (Adult Education) இந்நூல் எழுதப்பட்டது. மிகவும் எளிய நடையில், எளிய சொற்களைக் கொண்டு எழுதிய இந்நூல் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டவர்கள் தொடர்ந்து படிக்கும் நூலாக (Continuation Reading Book) அமைந்துள்ளது.

வாழ்க்கையில் அன்பு அடிப்படையானது. திருவள்ளுவர் காட்டும் இல்லற வாழ்க்கையின் அடிப்படையான உண்மைகளை இந்நூல் உணர்த்துகிறது. நாடக முறையில் அமைந்துள்ள இந்நூல் படிப்பவர்க்கு இன்பமும் சுவையும் பயப்பதோடு குடும்ப வாழ்க்கையைச் செம்மையாக நடத்தவும் வழி கூறுகிறது.

ரா. சீனிவாசன்.



# அன்பு வாழ்க



## காட்சி 1

இடம்: கந்தசாமி வீடு

**கந்தசாமி:** வா அப்பா! வடிவேலு! எப்பொழுது வந்தாய்? எல்லோரும் சுகமாக இருக்கிறார்களா! என்ன கலியாணம் நிச்சயமாய் விட்டதா?

**வடிவேலு:** ஓ! எப்பொழுதோ நிச்சயமாகி விட்டது. கலியாணத்துக்குத் தாம்பூலம் எல்லாம் மாற்றியாய்விட்டது. கலியாணத்துக்கு எங்கேயாகிலும் கடன் வாங்கவேண்டும். அதற்குத்தான் உன்னிடம் வந்தேன். ஆயிரம் ரூபாய் வேண்டும்.

**கந்தசாமி:** என்ன வடிவேலு! இவ்வளவு பணம் எதற்கு? அது இருந்தால் நம் வாழ்நாள் முழுவதும் போதுமே.

**வடிவேலு:** என்ன கந்தசாமி! கலியாணம் நடத்துகிறதாக இருந்தால் நாலுபேரு வருவார்கள் போவார்கள். கவுரவமாக நடத்த

வேண்டாமா! இந்தக் காலத்திலே கலியா ணம் நடத்துகிறது என்ருல் நாட்டியம் இல் லாமல் நடக்குமா! யார் பார்த்தாலும் நம் ஊரிலே நாட்டியக்கச்சேரி வைக்கிருர்கள். நாமும் சுலபமாக நாட்டியக்கச்சேரி வைக்க வேண்டாமா?

**கந்தசாமி:** இந்த ஞானம் எல்லாம் எங்கே கற்றுக்கொண்டு வந்தாய்? பெரிய பணக் காரர்கள் பழக்கம் எல்லாம் நீ பின்பற்ற வேண்டும் என்று விரும்புகிருயே. பாட்டாளி மகனுகிய நீ அவ்வளவு பணம் செலவு செய் வது நியாயமா?

**வடிவேலு:** 'குமாரி நிர்மலா' என்ற ஒருத்தி இருக்கிருள். அவள் நாட்டியம் மிக நன்ருக இருக்கிறதாம். ஊரிலே எல்லாம் மெச்சிக் கொள்கிருர்கள். அவளை என் கலியாணத் துக்கு நாட்டியக்கச்சேரிக்குக் கூப்பிடலாம் என்று நினைக்கிறேன்.

**கந்தசாமி:** கூப்பிட்டால் உன் கலியாணத் துக்கு என்னப்பா சிறப்பு!

**வடிவேலு:** நிறைய பேர் வருவார்கள். ஏக தடபுடலாக நடத்தலாம். பெரிய மனிதர் கள் எல்லாம் நம் வீட்டுக்கு வருவார்கள். எல்லோரும் கண்டு மகிழ்வார்கள். கூட்டம் நிறைய வரும்.

**கந்தசாமி:** ஏனப்பா அப்போது உன்னைப் பார்க்க வருவார்களா! அந்த நடனக் காரியைப் பார்க்க வருவார்களா! உனக்குக் கலியாணமா அந்த நடனக்காரி நிர்மலாவுக் குக் கலியாணமா! எல்லாம் அவளைத்தான் பார்க்க வருவார்கள். அவளைப் பார்க்கிற துக்கு நீ ஏனப்பா பணம் கொடுக்க வேண்டும்?

**வடிவேலு:** என்னப்பா நம் கலியாணத்திலே கச்சேரி வைத்தால் நமக்குத்தானே கவுரவம். எல்லோரும் பார்த்துவிட்டுப் போகட்டுமே நல்லதுதானே. நாட்டியம் பார்க்கிறது தவரு என்ன?

**கந்தசாமி:** தவறு இல்லையப்பா. தனிமனிதர் அவ்வளவு பணம் கொடுக்க முடியுமா? நாட்டியம் என்றால் பெரிய சபைகளில் வைத்துக் கொள்ளட்டும். நாடக மேடை களில் வைக்கட்டும். சினிமாவில் காட்டட்டும். அங்கே எல்லோரும் காசு கொடுத்துப் பார்ப் பார்கள். நீ ஏன் எல்லோருக்கும் சேர்ந்து பணம் கொடுக்கிருய்? பெரிய பணக்காரர் கள் தாம் இவற்றை எல்லாம் வைத்து நடத்த முடியும்.

**வடிவேலு:** ஆமாம் கந்தசாமி! அது வீண் தான். பணக்காரர்கள் தாம் ஆடம்பரத்துக்

குச் செலவு செய்யமுடியும். அவர்களும் இவ்வாறு ஆடம்பரமாகச் செலவு செய்வதும் பொருத்தம் இல்லை. நாம் அவர்களைப் போல ஆடம்பரமாகச் செலவு செய்யக்கூடாது. கடன் வாங்கிப் பணம் செலவு செய்தால் நான்தானே பின்னல் தீர்க்கவேண்டும். கந்தசாமி! நான் சீட்டு கட்டி இருக்கிறேன்· அதை எடுத்து மிகச் சிக்கனமாகச் செலவு செய்கிறேன்.

**கந்தசாமி:** அதுமட்டும் இல்லை வடிவேலு! இந்த உணவு நெருக்கடி காலத்திலே எல்லோரையுங் கூப்பிட்டு அவர்களுக்குச் சோறு போட்டுக் கொண்டு இருக்காதே. அநாவசியமான செலவு செய்யாதே அப்பா!

**வடிவேலு:** நீ கலியாணத்துக்குத் தவருமல் வரவேண்டும். குடும்பத்தோடு வர வேண்டும்.

**கந்தசாமி:** ஏனப்பா குடும்பத்தோடு? ஒவ்வொரு குடும்பமும் குடும்பத்தோடு வந்தால் உன்னல் சமாளிக்க முடியுமா! கலியாணத்துக்கு நாங்கள் வருகிருேம். ஆனல் சாப்பிடும்படி தொந்தரவு செய்யக் கூடாது. அப்படியானல் வருகிருேம். வெளியூராரை மட்டும் கவனி. உள்ளூராருக்குச் சாப்பாடு போடாதேயப்பா. அவரவர்கள் வீட்டில் சாப்பிட்டு வரட்டுமே,

**வடிவேலு:** நீ பேசுவது எல்லாம் புதுமையாக இருக்கிறது. ஆனல் நீ சொல்வது வாழ்க்கைக்குப் பெரிதும் பயன்படும். கட்டாயம் அப்படியே செய்கிறேன். சிக்கனமாகவே கலியாணச் சடங்கை முடிக்கிறேன். நம்மைப் போன்ற தொழிலாளிகள் வாழ்க்கையில் சிக்கனமாகச் செலவு செய்யக் கற்றுக் கொள்ள வேண்டும். முக்கியமாகக் கலியாணம், கருமாதி முதலிய சடங்குகளுக்குப் பிறர் மெச்சிக் கொள்ள வீணுகப் பணம் செலவு செய்யும் பழக்கத்தை விட்டுவிடவேண்டும். நீ சொல்கிறபடியே சிக்கனமாக இக் கலியாணத்தை நடத்த ஏற்பாடு செய்கிறேன்.



## காட்சி 2

இடம்: கந்தசாமி வீடு

**லட்சுமி:** என்னுங்க! வடிவேலுவுக்குக் கலியாணமாம். ஒரேநாள் கலியாணமாம்.

**கந்தசாமி:** பின்னே ஒன்பதுநாள் நடத்துவார்களா! அது அந்தக்காலம். இந்தக காலத்திலே சிக்கனமா நடத்தினல்தான் யாரும் முன்னுக்கு வரமுடியும். நாளைக்குத் தாழ்ந்து விட்டால் யார் உதவுவார்கள்?

லட்சுமி: சரி! அது போகட்டும் எனக்கு நகை இல்லையே! நான் எப்படிப் போகிறது? அந்த நாளிலே இருந்து நானுந்தான் சொல்லி வந்தேன். உங்கள் சொத்தையா கேட்டேன்? எங்கப்பா எழுதிவைத்த நிலத்தைத் தானே விற்கச்சொன்னேன். எனக்குக் கழுத்திலே போட்டுக்கொள்ள பொன் சங்கிலி வேண்டுமென்று எத்தனை நாளாகக் கேட்டு வருகிறேன். அந்த ஒரு காணி நிலத்தைவிற்று எப்பொழுதோ செய்து கொடுத்திருக்கலாம். அது செய்துகொடுத்திருந்தால் இப்பொழுது நகை இரவல் வாங்கவேண்டி இருக்காதே.

கந்தசாமி: அப்படிச் சொல்லு. நகை இரவல் வாங்கவேண்டி இருக்காது. நாம் மற்றவர்களுக்கு நகை இரவல் அடிக்கடிக் கொடுக்க வேண்டி இருக்கும். இப்பொழுது விளைகிற நெல்லு இல்லாமல்போகும். வீட்டு வீட்டுக்கு அரிசி இரவல் வாங்கவேண்டும். அதுகூட இந்த நாளில் கொடுப்பார் கிடையாது.

வயிற்றுக்குச் சோறுகிடைக்கிற நிலத்தை விற்றுவிட்டு ஆடம்பரத்துக்கு நகைபோட்டுக்கொள்கிறதா! நன்றாக இருக்கிறது நீ சொல்லுவது.

லட்சுமி: ஆண்களே இப்படித்தான். மனைவிக்கு நகைபோட்டுக் கண்குளிரப் பார்க்க

மாட்டார்கள். நான் கலியாணத்துக்கு வர வில்லே. நீங்கள் மட்டும் போங்க.

**கந்தசாமி:** நீ போகிறது கலியாணத்தைப் பார்க்கவா உன் நகையழகை அங்கே வருகிற பெண்களுக்குக் காட்டி வரவா! பாட்டாளி மக்களாகிய நமக்கு எதற்கு வீண் கவுரவம்.

வடிவேலு கலியாணத்தைப் பார்க்க வேண்டுமானல் வா. இல்லாவிட்டால் வீட்டில் பையனே வைத்துக் கொண்டு இரு. நான் மட்டும் போய் வருகிறேன்.

**லட்சுமி:** நல்லா சொன்னீங்க. நான் கட்டாயம் வரப்போகிறேன். நான் கலியாணத்தைப் பார்க்க வேண்டும். வடிவேலுவைக் கலியாணம் பண்ணிக்கொள்ளப் போகிற பெண் வள்ளி எனக்குத் தெரியும். அவளும் எங்கள் ஊர்தான். எனக்கு நிரம்ப வேண்டியவள். கட்டாயம் நான் போகப் போகிறேன். நீங்கள் வேண்டுமானல் வீட்டிலே இருந்து பையனேப் பார்த்துக்கொண்டு இருங்க. நகை இல்லாவிட்டால் பரவா இல்லே.

**கந்தசாமி:** சரி! சரி! புறப்படு போகலாம்.



## காட்சி 3

இடம்: கந்தசாமி வீடு

(வடிவேலுவுக்குக் கலியாணமான சில நாளைக்குப் பிறகு வடிவேலுவும் கந்தசாமியும் சந்திக்கிறார்கள்.)

**வடிவேலு:** கந்தசாமி! நீங்கள் கலியாணத்துக்கு வந்தது மிக்க மகிழ்ச்சி. எல்லாம் சிக்கனமாகச் செய்து விட்டேன். புடவை துணி எல்லாம் சேர்ந்து நூறு ரூபாயில் முடித்து விட்டேன். உன் பேச்சைக் கேட்காமல் ஆடம்பரத்துக்குச் செலவு செய்திருந்தால் இன்றைக்கு இவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கமுடியுமா. ஒரு நாள் ஆடம்பரத்துக்கு வாழ்நாள் முழுவதும் துன்பப்பட்டிருப்பேன். உனக்கு நிரம்ப நன்றி!

**கந்தசாமி:** வடிவேலு! இதுவரையில் நடந்த கலியாணம் மொத்தம் சடங்குதான். இனிமேல் நீங்கள் நடத்தும் வாழ்க்கையை ஒட்டித்தான் எல்லாம் இருக்கிறது. இனிமேல் நீங்கள் குடித்தனம் நடத்துகிறீர்களே அதை ஒட்டித்தான் உங்கள் வாழ்க்கையின் இன்பம் இருக்கிறது.

மனைவிதான் வாழ்க்கைத் துணைவி. நம் இன்ப துன்பங்களில் பங்கு கொள்ளுகிறவள் மனைவிதான், நாம் பணக்காரர்களைப் போல்

மனைவியை அலங்கரித்து அழகு படுத்திக் கற்பனையில் வாழ்கிறவர்கள் அல்லர்.

நாம் வாழ்க்கைப் போராட்டத்தில் கலந்து உழைக்கிறவர்கள். நமக்கு வாழ்க்கை ஒரு போராட்டம். உழைத்தால்தான் உணவு. இத்தனை துன்பங்களிலும் நமக்கு ஆறுதல் அளிப்பவள் மனைவி. ஊக்கம் இழந்தால் உற்சாகம் ஊட்டுபவள் அவள். அவளிடத்தில் அன்பாக இருக்கவேண்டும்.

இருவரும் அன்புகலந்து வாழ்வதே இன்பம். இடிந்தவீட்டில் இருந்தாலும் சரி. கூரைவீட்டில் வாழ்ந்தாலும் சரி. மிகச்சிறிய வீடாயிருந்தாலும் சரி. உடைந்த சுவராக இருந்தாலும் சரி. வறுமையில் துன்பப்பட்டாலும் சரி. அன்பான வாழ்க்கை கிடைக்குமானுல் அதுதான் வாழ்வின் நோக்கம். அதுதான் வாழ்வின் இன்பம்.



அதனுல் குடும்பத்தில் அமைதியும் அன்பும் இன்பமும் இருக்கவேண்டும். அதுவே திருவள்ளுவர் நமக்கு உணர்த்தும் நல்ல நெறி. அன்புதான் குடும்ப வாழ்க்கைக்கு அடிப்படை என்பதை அவர் நன்ருக விளக்கி இருக்கிருர். அன்பான வாழ்க்கை நடத்த இருவரும் உள்ளங்கலந்து வாழவேண்டும்.

**வடிவேலு :** நீ சொல்லுவது உண்மைதான் கந்தசாமி. இப்பொழுது எல்லாம் எங்கே



இருந்தாலும் சீக்கிரம் வீட்டுக்குப் போக வேண்டும் என்ற எண்ணம் பிறக்கிறது. கலியாணமானபிறகு வேலையிலே உற்சாக மாகச் செய்கிறேன். வீண்செலவு செய்ய விருப்பம் இருப்பது இல்லை. ஒட்டல்களிலும் வீணுகப் பணம் செலவழிக்க மனம்வருவ தில்லை.

அவள் சமையல் செய்து போடுவது சாதா ரண குழம்பும் சோறும்தான். ஆனல் அவள் அன்புச் சிரிப்பிலே என் உள்ளத்தைப் பறி கொடுக்கிறேன். அவ்வுணவு எனக்கு அமுத மாக விளங்குகிறது.

நான் பகலில் உழைக்கும் உழைப்பு எல் லாம் அவள் சிரித்துப் பேசும் பேச்சில் மறந்து விடுகிறேன். அவள் கலகலத்த பேச்சிலே என் சோர்வு எல்லாம் எங்கோ ஓடுகிறது.

கோடையிலே வீட்டுக்கு வந்தால் குளிர்ந்த நீர் கொட்டிக் குளிக்கச் சொல்லுகிருள். அவள் என் உடம்பைத் தேய்த்துக் குளிப் பாட்டும் பொழுது நீர் குளிர்கிறதா என்று கேட்டாள். நீர் குளிர்கிறது. ஆனல் நீ தொட்ட இடமெல்லாம் சிலிர்க்கிறதே என் றேன். அவள் கலகலக்கச் சிரித்தாள்.

வேலையை விட்டு வீட்டுக்குப் போகும் பொழுது என்னை மகிழ்ச்சியோடு எதிர் பார்க்

கிருள். அவள் உற்சாகத்தோடு விளங்குவதைப் பார்த்தால் வேலையில்பட்ட துன்பமெல்லாம் இருந்த இடம் தெரிவதில்லை.

நான் வாங்கிக் கொடுத்த சேலையைப் பத்திரமாக உடுத்துகிருள். அதை உடுத்தி அவள் நின்று உள்ளங் குளிரப் பார்க்கும் பார்வையில் என் கவலை யெல்லாம் ஒரு நொடிப் பொழுதில் போய்விடுகிறது. உண்மையில் அன்போடுவாழும் வாழ்க்கைதான் அப்பா உயர்ந்தது. அதுதான் இன்பம். அன்புதான் உயர்ந்தது. நான் அவளுக்காக வாழ்கிறேன். அவள் எனக்காக வாழ்கிருள். நீ என்னுடைய நண்பன். ஆதலால் உன்னிடந்தானே என் அனுபவத்தைச் சொல்லமுடியும்; என் உள்ளத்தைத் திறந்து காட்டமுடியும்.

**கந்தசாமி**: ஆமாம் வடிவேலு. அன்பாக இருந்தால் குடும்பவாழ்வு இனிக்கும். அன்பு இல்லை என்ருல் குடும்பவாழ்வு கசக்கும்.

**அன்பு வாழ்க என்று அமைதியில் ஆடுவோம்**
**ஆசைக் காதலைக் கை கொட்டி வாழ்த்துவோம்**

**வடிவேலு**: அவள் காத்துக்கொண்டிருப்பாள். நான் வருகிறேன்.

**கந்தசாமி**: ஆமாம். இவ்வளவு நேரம் உன்னை நிறுத்திவைத்ததே தப்புதான் போய்வா.



## காட்சி 4

இடம்: கந்தசாமி வீடு

**லட்சுமி:** நான் வள்ளிவீட்டுக்குப் போய் வந்தேன். அவருடைய கிழிந்த துணிகளை எல்லாம் அவளே தைத்துக் கொடுக்கிறாள். துணிகளை எல்லாம் துவைத்துக் கொடுக்கிறாள். எதையும் உற்சாகமாகவும் முகமலர்ச்சியோடும் செய்கிறாள். வடிவேலுவும் நல்லவர். அவரே வீட்டுக்கு வேண்டிய நீரைக் கிணற்றில் மொண்டு ஊற்றுகிறார். நிரம்ப அன்பாக இருக்கிறார்.

**கந்தசாமி:** அன்பு இல்லாமல் ஆடம்பரம் வேண்டும் என்று விரும்புகிறாயா? இப்படித் தான் தமிழ் நாட்டுக் குடும்பங்கள் வாழ வேண்டும். குடும்ப வாழ்வு அன்பை அடிப்படையாகக் கொண்டது. அன்பு இருந்தால் தான் குடும்பத்தில் அமைதியும் இன்பமும் நிலவும். வீட்டில் இருக்கிற பழக்கங்களே நாட்டிலேயும் இருக்கும். உலகத்தில் ஆடம்பரம் மிகுந்து விட்டது. பொய் நிறைந்து விட்டது. பொய்யும் ஆடம்பரமும் நிறைந்த உலகில் ஏழைகளின் வாழ்க்கையில் மட்டும் ஓரளவு உண்மையும் அன்பும் இருக்கிறது. அதனால்தான் நாடு வாழ்கிறது.

**லட்சுமி:** அவர்கள் சிறிய வீட்டில் குடியிருந்தாலும் எவ்வளவு சுத்தமாக வைத்திருக்கிறார்கள் தெரியுமா! வீடு நன்றாக மெழுகி சாணம் இட்டுத் தூசு இல்லாமல் பெருக்கி அழகாக வைத்திருக்கிறார்கள்.

வீட்டில் சாமான்கள் கூட ஒழுங்காக அடுக்கி வைத்திருக்கிறார்கள். நம்மைப் போலத் தொழிலாளக் குடும்பங்கள் எல்லாம் வள்ளியைப் பார்த்துப் பல செய்திகள் கற்றுக் கொள்ள வேண்டும்.

**கந்தசாமி:** ஆமாம். சுத்தம்தான் சோறு போடும். வீடு சுத்தமாக இருந்தால்தான் யாரும் அதில் இருக்க மனம் விரும்புவார்கள். அதே போலக் கணவன் மனைவியர் அன்பாக வாழ்க்கை நடத்தினால்தான் குடும்பமும் இன்பமாக இருக்கும்.

**லட்சுமி:** இன்னொன்று சொல்ல மறந்து விட்டேன். வள்ளி மூன்றுமாதமாக முழுகாமல் இருக்கிறாள். அவளுக்குப் பெண் குழந்தை பிறந்தால் நம் பையனுக்குக் கேட்டுக் கட்டிக் கொள்ள வேண்டும். நம்முடைய நட்பு எந்தக்காலத்திலும் குறையக் கூடாது. அவர்கள் நல்லவர்கள்.

**கந்தசாமி:** (சிரித்துக் கொண்டே) குழந்தை பிறக்கட்டும். சரி, ஆனால் நீயும் நானும் விரும்

பினால் போதுமா. கலியாணம் நடந்து விடுமா.

**லட்சுமி:** ஏன் அவர்கள் நமக்கா கொடுக்க மாட்டார்கள்! அவர்கள் சம்மதிக்க மாட்டார்களா என்ன!

**கந்தசாமி:** அவர்கள் சம்மதித்தால் போதுமா நம் பையனும் அவர்கள் பெண்ணும் அல்லவா சம்மதிக்க வேண்டும். அவர்கள் எதிர்கால வாழ்க்கையை நிச்சயம் இட நீ யார் நான் யார்! எதிர்காலம் இருக்கிறது. அந்தக் காலத்தில் பார்த்துக் கொள்ளலாம்.

(எதிர்காலம் என்ற திரை விழுகிறது.)

நாடகம் முடிகிறது.





## வயதுவந்தவர் கல்வி வெளியீடுகள் :



| | | |
|---|---|---|
| படித்துப் பார் | .... | 0—3—0 |
| எண்ணிப் பார் | .... | 0—4—6 |
| தெரிந்துகொள் | .... | 0—2—0 |
| உழவும் தொழிலும் | .... | 0—2—6 |
| அன்பு வாழ்க | .... | 0—2—6 |
| சிறு கதைகள் | .... | 0—2—6 |

இந்நூல்கள் வேண்டுவோர் :—

**ரா. சீனிவாசன்,**

9, அருணசல கிராமணி தெரு,

**சேத்துப்பட்டு, சென்னை - 10**

என்ற விலாசத்திற்கு எழுதவும்

THE B. N. K. PRESS, MADRAS